42 " உயர்ந்த லட்சியவாதி எவ்வாறாயினும் தன் அதிகாரத்தையும் அந்தஸ்தையும் காப்பாற்றிக் கொள்வதென்று துணிந்து விட்டால், வகைமுறை பாராது, முழு சர்வாதியாக மாறிவிடுவதற்கே சரித்திரத்தில் பல சான்றுகள் உண்டு." ***

" ஒரு பாத்தி எவ்வளவுக்கு எவ்வளவு அறிவுக்குத் தக்கதாக இருக்கிறதோ அவ்வளவுக்கு அவ்வளவு சாந்தமும், பொறுமையும், உணர்ச்சி வசப்படாமையும் இன்றியமையாததாகும்". ***

* " சிறு அபேக்ஷை பற்றவனுக்கும், சமர்த்தனுக்கும், வெற்றியுடையோனுக்கும், தீர்க்க புத்தியால் எதையும் ஆராய்பவனுக்கும், ஆகாத காரியம் ஒன்றுமில்லை. அதிகமாக கோபமுடையவனும், அடக்கமற்ற சபல சித்தமுடையவனும், பிறர் பழிப்புக்கு அஞ்சுவோனும் ஒருகாலும் எதிலும் வெற்றி காணமாட்டான் ***

<u>அன்பு:</u> மனிதன் தன் மிருக இயல்பின் நலனைத் துறக்கும் போதுதான் அன்பு என்பது அமையும். " என்னைப்பார்க்கிலும் அதிகமாகத் தந்தையையும் தாயையும் நேசிப்பவன் எனக்கு உரியவனல்லன். எவன் என்னைப் பார்க்கிலும் அதிகமாக மகனையும் மகளையும் நேசிக்கின்றானோ அவன் எனக்கு உரியவனல்லன்", ஏனெனில், உங்களை நேசிப்பவர்களை மட்டுமே நேசித்தால் அது அன்பன்று; உங்கள் பகைவர்களை நேசியுங்கள்; உங்களை வெறுப்பவர்களையும் நேசியுங்கள்.

தந்தை மகன் மனைவி நண்பர்கள் ஆகியோரிடம் கொள்ளும் அன்பானது மனிதர்கள் தங்கள் தனி நலன்களைத் தியாகம் செய்வதாக அநேகர் சாதாரணமாக எண்ணுவர். உண்மை அதுவன்று. மனிதர்கள் தங்கள் தனி வாழ்வின் தற்பெருமை வீணானது என்று உணர்வதாலும் அவ்வாழ்வுக்கென்று தனி நலனை அடைய முடியாது என்று உணர்வதாலும் <u>தன்னலத்தியாகம்</u> ஏற்படுகிறது. ஆகவே தன்னலத் தியாகத்தின் மூலமே மனிதன் உண்மையான அன்பை அடைகிறான். அதனால் தந்தை, மகன், மனைவி, இதரர்கள், நண்பர்களை உண்மையாக நேசிக்க முடிகிறது.

நமக்கு மேலாக மற்ற உயிர்களை நேசிப்பதே அன்பு – அதாவது நமது மிருக இயல்பின் தனி நலனுக்கு மேலாக அவைகளின் நலனை நாடுவதிலே அன்பு உதயமாகிறது.

பின்னால் சுயநலத்தை அடைவதற்காக இப்போது அதைத் தியாகம் செய்து வைத்தல் தேர்ந்தெடுத்த லாபம் மட்டும் அன்பு செலுத்துவதைப் போன்றது. தன்னைத் தியாகமாக அர்ப்பித்து பெறுவதை அன்பென்று சொல்லுதல் பொருத்தமன்று.

* அன்பின் அமைதியான இன்பத்திலே அதன் விளைவு.** எல்லாம் எனக்குச் சொந்தந்தான் எனக்கு எதுவும் வேண்டுவதில்லை" மனிதர்கள் அடிக்கடி சொல்லுகிறார்கள். இப்படி சொல்லும் போதே மற்றவரிடம் வெறுப்பு கொண்டிருப்பதை நாம் அறிகிறோம்.**

உண்மையாகவே தன்னைப்பார்க்கிலும் மற்றவர்களை விரும்புவதே அன்பு; ~~[illegible]~~ இப்படித்தான் நாம் அன்புக்குப் பொருள்

* கொள்கிறோம். வேறு பொருள் கொள்ள முடியாது* நமது அன்பின் அளவு நமது சொந்த நலனை எவ்வளவு தியாகம் செய்கிறோம் என்பதைப் பொறுத்தது **

ஒளி இருளில் பிரகாசிக்கிறது. ஆனால் இருள் அதை உணர முடியவில்லை *** அன்பு செய்தலே அறிவுக்குப் பொருத்தமான மனிதனின் தொழில் *** அன்புணர்ச்சி மனிதனை மற்றவர்களுக்காக வாழும்படி செய்கிறது *** ஒருவன் சொந்த நலத்தை மறந்துக் கொண்டால்தான் மற்றவர்களுக்கு உதவி செய்ய முடியும் ***